Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

என்னும் பாடலடியில் குடிமக்கள் துன்பத்தால் வருந்தும்படி கொலைத் தொழிலுக்கு அஞ்சாத அமைச்சரால் நெறியன்றி பொருளை வாங்கிக் கொண்டு செங்கோல் வளைய ஆட்சி செய்யும் மன்னன் எனக் கூறுவதில் கொலை செய்ய முடியலக் கூடிய அளவிலான சீற்றம் தோன்றும் மெய்ப்பாடு அமைந்துள்ளது.

**உவகை**

மனம் மகழ்வுற்ற நிலையில் தோன்றும் உணர்வே உவகையாகும். இதன் இயல்பினை,

**செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென**

**அல்லல் நீத்த உவகை நான்கே (தொல். பொரு. மெய்ப்பாட்டியல், நூ. 11)**

என்ற நூற்பா உணர்த்துகிறது. இவற்றுள் செல்வம் என்பது செல்வ நுகர்ச்சியும், புலன் என்பது புலமையால் ஏற்படும் அறிவு முதிர்ச்சி, புணர்வு என்பது காமப்புணர்வு, விளையாட்டு என்பது அனைவரும் ஒன்றிணைந்து விளையாடுவதாகும்.

**புல்லினத்து ஆயர் மகளிரோடு எல்லாம்**

**ஒருங்கு விளையாட (கலி. முல்., பா. 111.5-6)**

என்னும் அடியில் பாங்கர்க் கொடி, முல்லைக் கொடி போன்றவை பரவியுள்ள தோட்டத்தில் ஆடு மேய்க்கும் மகளிர், பசு மேய்க்கும் மகளிர், எருமை இன ஆயர்மகளிர் என அனைவரும் ஒன்று கூடி விளையாடினோம் என்பதில் விளையாடல் குறித்த மெய்ப்பாடு அமைந்துள்ளது. இதன் மூலம் அனைத்து மகளிரும் உயர்வு, தாழ்வு இன்றி விளையாடி மகிழ்கின்ற உவகையின் உளவியலும் வெளிப்படுகின்றது. தன் துணையுடன் ஆடிப்பாடி விளையாட ஆறு, குளம் போன்ற இடங்களுக்கு சென்ற மகிழ்ச்சியின் உள்ளுணர்வினை அறியலாம்.

**முடிவுரை**

சங்ககாலப் புலவர்கள் தங்களின் கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கு பல்வேறு வகையான உத்திகளைக் கையாண்டுள்ளனர். இவை பாடலுக்கு கருத்தினை சேர்ப்பதோடு, அழகினையும் சேர்க்கிறது. அக வாழ்வின் இயல்பினை வெளிப்படையாகக் கூறாமல் உள்ளுறைகளை பயன்படுத்திக் கூறிய புலவர்களின் படைப்பாக்கத் திறனைக் கலித்தொகையின் வாயிலாக அறியமுடிகிறது. மெய்யின் வழி தோன்றக் கூடிய உணர்வுகளை கலித்தொகைப் பாடல்களில் புகுத்திக் கற்போர்க்கு நெகிழ்வூட்டும் வகையில் இலக்கண மெய்ப்பாடுகளுடன் கலித்தொகை பாடல்களை உளவியல் ரீதியாக ஒப்பிடப்பட்டு இவ்வாய்வானது அமைக்கப்பட்டுள்ளது.

**துணைநூற்பட்டியல்**

[1] இளம்பூரணார். *தொல்காப்பியம் பொருளாதிகாரம்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம், சென்னை - 600108.

Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

[2] கு.வெ.பாலசுப்பிரமணியன். *கலித்தொகை மூலமும் உரையும்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-600098, முதற்பதிப்பு - 2004.

[3] திருக்குருகைப் பெருமாள் கவிராயர். *மாறனலங்காரம்.* செந்தமிழ்ப் பிரசுரம், மதுரை, இரண்டாம்பதிப்பு – 1929.

[4] வீரமாமுனிவர். *ஐந்திலக்கண தொன்னூல் விளக்கம்.* சூசையப்பர் அச்சுக்குடம், சென்னை, முதற்பதிப்பு – 1891.

[5] வெள்ளைவாரணன் .க. *தொல்காப்பியச் சிந்தனைகள்.* இந்தியப் பண்பாட்டு ஆய்வு மையம், சென்னை, முதற்பதிப்பு – 2013.

[6] வைத்தியநாத தேசிகர். *இலக்கண விளக்கம்.* சரஸ்வதி மகால் நூல் நிலையம், தஞ்சை, முதற்பதிப்பு – 1974.

[7] திலகவதி, க. *சங்ககால மகளிர் வாழ்வியல்.* இறையருள் பதிப்பகம், திருச்சி, முதற்பதிப்பு – 2004.

[8] பகவதி, கு. *திறனாய்வு அணுகுமுறைகள்.* உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு - 1989.

[9] பாலச்சந்திரன், சு. *இலக்கியத் திறனாய்வு.* நியூ செஞ்சுரி புக் ஹிவுஸ், சென்னை, முதற்பதிப்பு - 1976.

[10] வனிதா, ஜெ. "சங்க காலத்தில் மகளிர்." *செம்மொழித் தமிழ் சிறப்புதழ்*, நவம்பர் 2019, ISSN: 2321-0737.

[11] கனகசுந்திரி, பெ. "சங்க இலக்கியங்களில் தலைவி." *நவீனத் தமிழாய்வு ஆய்விதழ்*, அக்டோபர் 2021, ISSN: 2321 – 984X.

[12] மாணிக்கம், ஞ. *தொல்காப்பியம்.* உமா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு - 2006.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை

**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை

**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்.



Pandian Journal of Women's Studies
*Peer-Reviewed Journal*
பாண்டியன் மகளிர் ஆய்வு இதழ்
மதிப்பாய்வு செய்யப்படும் இதழ்
Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X


# Manaiththakka Manbudaiyal

**Dr. N. S. K. Sangeethratha**, Assistant Professor of Tamil, Thiagarajar College, Madurai, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0002-0297-3100
DOI: 10.5281/zenodo.10511756

## Abstract

*Life is not about living! Living life successfully is Life! Love is the foundation of life! The shield of life is (Aram) Virtue. When a life partner comes into one's life, everything that belongs to him becomes theirs. Selfishness should be avoided and maintenance of other's welfare becomes important. What belongs to one becomes theirs when they are getting married. At that time, what is for them in their life is for the next generation. A wife is an auspicious symbol of married life because she is the one who heads the house. Therefore, she is called Illal. In Tamil society, maintaining a home well is a virtue which is why she is more important in married life. Women are much more responsible in household duties. The Tamil women have followed moral codes of life. They stick to the codes of life and exhibit virtues in their lives. Hence, the purpose of this article is to study the characteristics of such women as having love, patience, compromise, tolerance, sacrifice, bravery, responsibility, caring for elders, hospitality and instruction through select works from Tamil literature.*

**Keywords:** Women, Kindness, Hospitality, Personality, Tamil Literature.

## References

[1] Rama Subramaniyam, V.T. *Silapathikaram*. Thirumagal Nilaiyam, Chennai, 2009.
[2] Rama Subramaniyam, V.T. *Puranaanuru*. Thirumagal Nilaiyam, Chennai, 2000.
[3] Gothandam, G. M. Dr. *Thiukkural*. New Century Book House, Chennai, 2011.
[4] Singaravadivelan, Arra. *Iyngurunuru*. Kovilur Madalayam, Kovilur, 2003.
[5] Thamilannal. *Tamil Illakiya Varalaru*. Meenatchi Puthaga Nilaiyam, Madurai, 2014.
[6] Thirugnanasambantham, S. *Tholkappiyam Porulathigaram moolamam uraiyum*. Kathir Pathippagam, Thiruvaiyyaru, First Edition – 2011.
[7] Nagarasan, V. K*urunthogai*. *N*ew Century Book House Pvt. ltd., Chennai, First Edition -- 2004.
[8] Subramaniya Bharathiyar. *Barathiyar Gnana Padalgal*. *Wiki Source*. http://tinyurl.com/mhw3cpp9 Accessed 23.09.2023.
[9] Meyyappan. *Bharathiyar Kavithaigal*. Manivasagar Pathipagam, Chennai, 2000.

**Author Contribution Statement:** NIL.
**Author Acknowledgement:** Nil
**Author Declaration:** Nil

Pandian Journal of Women's Studies
*Peer-Reviewed Journal*



*பாண்டியன் மகளிர் ஆய்வு இதழ்*
*மதிப்பாய்வு செய்யப்படும் இதழ்*
Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

# மனைத்தக்க மாண்புடையாள்

**முனைவர் ந. செ. கி. சங்கீத்ராதா,** தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி, மதுரை, தமிழ்நாடு, இந்தியா.
ORCiD: https://orcid.org/0000-0002-0297-3100
DOI: 10.5281/zenodo.10511756

**ஆய்வுச் சுருக்கம்**

*வாழ்க்கை என்பது வாழ்ந்து போவதல்ல! வாழ்ந்து நிற்பது!. இல்வாழ்க்கையின் அடித்தளம் அன்பு! மேல்தளம் அறம்! வாழ்வில் ஒரு துணை வரும்போதுதான் தனக்கானது எல்லாம் தங்களுக்கானதாகிறது. தன்னலம் மறந்து தன்னைச் சார்ந்தவர் நலம் பேணப்படுகின்றது. மனைவாழ்வில் மக்கட்பேறு கிட்டும்போது தங்களுக்கானது அவர்களுக்கானதாகிறது. வளர்ந்து வரும் வாழ்க்கையில் அவர்களுக்கானது இப்பொழுது அடுத்தவர்களுக்கானதாகிறது. தன்னலம் மறந்து பொதுநலமாகிறது. மனைவாழ்க்கைக்கு மங்கலமாக இருப்பவள் மனைவி. இல்லத்தை ஆள்பவள் என்பதாலே இல்லாள் எனப்படுகிறாள். இல்லத்தைச் சிறப்பாக நடத்துவதே ஒரு அறம் அதனால்தான் அது இல்லறம் எனப்படுகின்றது. இல்லறக் கடமைகளில் பெண் அதிக முக்கியத்துவம் பெறுகிறாள். பெண் என்றாலே பேணும் தன்மையுடையவள். அத்தகைய பெண்களிடம் காணப்படும் அன்புடைமை, பொறுமை, விட்டுக்கொடுத்தல், சகிப்புத்தன்மை, தியாகம், வீரம், பொறுப்புணர்வு, பெரியோரைப் பேணல், விருந்தோம்பல், அறிவுறுத்தல் ஆகிய பண்புநலன்களை இலக்கியங்கள் வாயிலாக ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** பெண்கள், கருணை, விருந்தோம்பல், ஆளுமை, தமிழ் இலக்கியம்.

**முன்னுரை**

பெண் என்றாலே பேணும் தன்மை உடையவள். தன்னை மட்டுமன்றி தான் சார்ந்த அத்துணைபேரையும் காக்கும் திறன் கொண்டவள். காலந்தோறும் தமிழிலக்கியங்கள் பெண்ணின் பெருமையைக் கொண்டாடி மகிழ்கின்றன. இல்வாழ்க்கையின் மங்கலம் மனைவி. அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை எனின் வாழ்வின் அறனாக மட்டுமன்றி அரணாகவும் இருப்பவள் மனையாள். மனையை விளங்கச் செய்பவள் என்பதால் மனைவி!. இல்லத்தை ஆள்பவள் என்பதால் இல்லாள்!. பேணும் தன்மை உடையவள் என்பதால் பெண்!. சகிப்புத்தன்மை அதிகம் கொண்டிருப்பதால் சகி! இவையெல்லாம் பெண்ணிற்குச் சொல்லும் அடைமொழிகள் மட்டுமன்று அடையாளப்படுத்தும் மொழிகளாகும். அதனால்தான் வள்ளுவப்பெருந்தகை 'வாழ்க்கைத் துணைநலம்' என்று பெயரிட்டார். 'மனையறத்தின் வேர்' என்றார் சேக்கிழார்பெருமான். அத்தகைய மனையாளின் மாண்புகளை ஆய்ந்து விரித்துரைப்பதே இக்கட்டுரையின் மையமாகும்.

**இனிய இல்லறம்**

இல்லறம் என்பது குடும்பம், சமுதாயம், துறவறம், வீடுபேறு என்ற ஒரு நீண்ட வாழ்க்கை நடைமுறையின் முதல் படி. ஒரு குடும்பத்தோடு நிற்கும் ஒன்றல்ல இனிய இல்லறம்.

**'இல்லறம்' என்பது வீட்டிலிருந்து வாழும் அறநெறி என்னும் பொருளாகும். இல்லற வாழ்வே மக்களை மாக்களினின்றும் வேறு பிரித்து உயர்த்துவதாகும். (இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 54)**

திருமணமாகி தலைவன் இல்லம் சென்று மீண்ட தலைவியைப் பார்த்து அவளது தோழி நலம் விசாரிக்கின்றாள். அப்போது தலைவன் நாட்டு தண்ணீர் எத்தகையது என வினவுகிறாள். அதற்குத் தலைவி, ஒருமுறை நானும் தலைவனும் இடைச்சுரம் சென்றுகொண்டிருந்தபோது எனக்குத் தண்ணீர் தாகம் ஏற்பட்டது. அங்கே ஒரு குளம் தென்பட்டது. அதில் அழுகிய இலைகள் உதிர்ந்து காணப்பட்டன. முலம் மான் உண்டு கலங்கிய எஞ்சிய நீரே இருந்தது. அதனை எடுத்துப் பருகிய எனக்கு அந்த நீர் நமது வீட்டு தேன் கலந்த பாலைக் காட்டிலும் இனிமையாக இருந்தது என்றாள். தலைவன் அருகிலிருக்கும் போது கழனித்தண்ணீர் கூட தலைவிக்கு கரும்புச் சாறாக இனிக்கின்றது. தலைவன்பால் தலைவி கொண்ட அன்பு எத்தகைய குறையையும் நிறைவாகவே பேச வைக்கின்றது. தோழி கேட்கிறாள். தலைவன் ஊரில் தண்ணீர் உப்புகரிக்குமாமே என்று தோழி கேட்கிறாள் தோழி, அதற்கு அந்தத் தலைவி, பாலும், தேனும் கலந்த நீரினும் இனிமை எங்கள் ஊரின் (தலைவன் ஊர்) பள்ளங்களில் இலைகள் உதிர்ந்து கிடக்கும் மான் உண்டு எஞ்சிய கலங்கிய நீர் என்கிறாள். மான் உண்டு எஞ்சிய நீர்தான் இருந்தாலும் தலைவனது ஊரின்கண் இருப்பதால், அது தலைவிக்குப் பாலும் தேனும் கலந்த நீரினும் இனிமையாக உள்ளதாம்.

**தேன் மயங்கு பாலினுமினிய அவர்நாட்**
**உவலைக் கூவற் கீழ**
**மானுண் டெஞ்சிய கலுழிநீரே (ஐங்., பா. 5)**

இல்வாழ்க்கையின் சிறப்பே தான் சார்ந்த அவர் மட்டும் இனிதல்ல. அவர் சார்ந்த அனைத்தும் இனிது என்றாகிவிடுகிறது. இத்தகைய இல்லறத்தின் இனிய காட்சியினை ஐங்குறுநூற்றுப் பாடல் வாயிலாகக் காணலாம்.

**மறிஇடைப்படுத்த மான்பிணை போல**
**புதல்வன் நடுவணன்ஆக, நன்றும்**
**இனிதுமன்ற அவர் கிடக்கை, முனிவுஇன்றி**
**நீலநிற வியலகம் கவைஇய**
**ஈனும் உம்பருங் பெறலருங்குரைத்து (ஐங்., பா. 401)**

தலைவனும் தலைவியும் தம் புதல்வனை நடுவில் கிடத்தி இருமருங்கிலும் அவர்கள் படுத்திருக்கின்றனர். இந்தக் காட்சியை செவிலித்தாய் பார்த்து நற்றாயிடம் கூறுகின்றாள்.

Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

அவர்கள் படுத்திருந்த நிலை, மான் தண் பிணையோடு குட்டியை நடுவில் போட்டு கிடத்தியிருந்தது போல் இருந்தது. இந்த இன்பம் நிலவுலகிலும் கிட்டாது. வானுலகிலும் கிட்டாது என செவிலித்தாய் அக்காட்சியைக் கண்டு அக மகிழ்ந்து கூறுகிறாள்.

**இம்மையாகி மறுமையாகினும் நீயாகிய என் கணவரே!**

**நானாகிய நின் நெஞ்சு நேர்பவளே (குறுந்., பா. 49)**

தலைவன் மேல் மிக்க அன்பு கொண்ட தலைவி, தலைவனைப் பார்த்து இந்தப் பிறவி மட்டுமன்று அடுத்த பிறவியிலும் நீங்கள்தான் என் கணவராக வேண்டும் என்கிறாள். அதே சமயம் அடுத்த பிறவியிலும் நான்தான் தங்களது மனைவியாகவேண்டும் என்று சொல்லாமல், தங்களது நெஞ்சுக்கு இனிமையானவளாக இருக்க வேண்டும் என்கிறாள். இது தலைவியின் அன்பின் உச்சமாகும்.

**மெனக்கிடுதல்**

தலைவனுக்காகத் தலைவி உணவு சமைக்கிறாள். இதுவரை சமையல் அறிந்திடாதவள். கணவனுக்காக உணவு சமைத்திடவேண்டும் என்ற எண்ணம், அவனுக்குப் பிடித்ததாக இருக்க வேண்டும் என்ற பரிதவிப்பு, அவன் வருவதற்குள் சீக்கிரம் முடிக்க வேண்டும் என்ற வேகம் இவை எல்லாம் ஒன்று சேர்ந்து தலைவியைப் துரிதப்படுத்துகின்றன. மோர்க்குழம்பு செய்கிறாள். கெட்டியாக உள்ள தயிரைப் பிசைந்துகொள்கிறாள். தயிர் பிசைந்த கையினை கழுவாமல் அப்படியே கட்டியிருந்த பட்டுப்புடவையில் தடவிக்கொள்கிறாள். அடுப்பில் தாளிக்கும்போது புகை வருவதால் கண்கள் சிவந்துவிடுகின்றன. புகையால் படியும் கரியும் முகத்தில் ஆங்காங்கே படிந்துள்ளன. இவ்வளவு பாடுபட்டு செய்த உணவினை கணவன் வந்தவுடன் பரிமாறுகிறாள். அவன் நன்றாக உள்ளது என்றவுடன் அவளது முகம் முன்னைக்காட்டிலும் அதிகப் பொலிவுடன் காணப்பட்டது. இதனை,

**முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**

**கழுஉறு கலிங்கம் கழாஅது உடீஇக்**

**குவளை உன்கண் குய்ப்புகை கமழத்**

**தான் துழந்தட்ட தீம்புளிப் பாகர்**

**'இனிது' என கணவன் உண்டலின்**

**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே (குறுந்., பா. 167)**

இங்ஙனம் தலைவனுக்காக தலைவி மெனக்கிடுதல் சங்க இலக்கியத்தில் காட்சிபடுத்தப்பட்டுள்ளது. அதனால்தான்,

**மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**

**எனைமாட்சி தாயினும் இல் (குறள் - 52)**

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. இல்லறத்திற்கு விளக்கு இல்லாள் என்பதனை, மடந்தை இல்லா மனை பாழே! என்கிறார் ஔவையார்.

Pandian Journal of Women's Studies
Peer-Reviewed Journal

பாண்டியன் மகளிர் ஆய்வு இதழ்
மதிப்பாய்வு செய்யப்படும் இதழ்
Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

**கற்றுக்கொடுத்தல்**

'பெண்ணின் பெருமை' பேசிய திரு.வி.க., நான் முரட்டுக்குணமுடையவன், பிடிவாதக்காரன் *திருக்குறள்* படித்திருந்தும் என் குணம் மாறவில்லை என்று கமலாம்பிகையை கைபிடித்தேனோ அன்றே எனது குணநலன்கள் எல்லாம் மாறிவிட்டன. கமலாம்பிகை *திருக்குறள்* படிக்கவில்லை. எனக்குத் திருக்குறள் பாடமாகவே விளங்கினாள் என்று தனது மனை வாழ்க்கையைச் சிறப்பித்தவள் மனைவி கமலாம்பிகை என்கிறார். (வழி காட்டும் வள்ளுவம், ப.60)

காந்தியடிகளிடம் ஒருமுறை இந்த உண்ணாநோன்பு, சத்தியாகிரகம் இவற்றை எங்கிருந்து கற்றுக் கொண்டீர்கள்? என்றதற்கு காந்தியடிகள், **உண்ணாநோன்பினை தனது தாயிடமிருந்தும் சத்தியாகிரகத்தை எனது மனைவி யிடமிருந்தும் கற்றுக்கொண்டேன் என்றாராம். (சத்தியசோதனை, ப.125)** 'என் வாழ்க்கையே என் செய்தி' - காந்தியடிகள். (My Life is my Message) கற்றுக்கொடுத்தார் கஸ்தூரிபாய், கடைபிடித்தார் காந்திஜி. இல்லறம் என்பது பள்ளிக்கூடமல்!. அது ஒரு பயிற்சிக் கூடம்!.

சங்கப் புலவர் பிசிராந்தையாரிடம் வயதாகியும் வெள்ளைமுடியில்லாமல் (நரையின்றி) இருக்கக் காரணம் யாது? என்று வினவியதற்கு, மாட்சிமை பொருந்திய என் மனைவியும் அறிவார்ந்த மக்களும், சான்றோர்கள் நட்பும் என்கிறார்.

**யாண்டு பலஆகினும் நரைஇல ஆகுதல்**
**மாண்ட என் மனைவியோடு மக்களும் நிரம்பினர் (புறம்., பா. 191)**

இதில் முதலில் இடம் பெறுவது மாண்புடைய மனைவி ஆகும். வள்ளுவப் பெருந்தகையும் இல்லது என் இல்லவள் மாண்பானால்? என வினவுகிறார். அதனால்தான்,

**அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்**
**போஒய்ப் பெறுவது எவன் (குறள் - 46)**

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. பெண்ணின் நல்லாளொடு பெருந்தகை இருப்பதால் மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம். எண்ணில் நல்ல கதிக்கு யாதும் ஓர் குறைவில்லை என்கிறார் திருஞானசம்பந்தர். அறத்தின் நாயகன் இராமனுக்கு மணிமுடிசூட்டுவதற்கான காரணங்களை நிரந்தினிது கூறும்போது, 'பெரும்புகழ்ச் சானகி ஆம் நல்லாள்' என மனைவி நல்லவளாக விளங்கும் மாண்பினைச் சிறப்பாக எடுத்துரைக்கப்படுகின்றது.

**விட்டுக்கொடுத்தல்**

பாரதி ஒரு தீர்க்கதரிசி! ஆனால் குடும்பச் தீர்த்த தரிசியா என்றால், கேள்விக்குறியே? ஒருமுறை சமைப்பதற்காக செல்லம்மாள் அக்கம்பக்கம் கடன் வாங்கி வைத்திருந்த அரிசி பருப்புகளை எடுத்து முற்றத்தில் திரியும் சிட்டுக்குருவிகளுக்கு இட்டுச் சென்றவர் பாரதி! அதனை பார்த்தது விட்டுச் சென்றவள் செல்லம்மா! பார்த்து… விட்டுச்… சென்றவள் செல்லம்மா!…

Pandian Journal of Women's Studies
*Peer-Reviewed Journal*
*பாண்டியன் மகளிர் ஆய்வு இதழ்*
*மதிப்பாய்வு செய்யப்படும் இதழ்*
Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X


**காக்கை குருவி எங்கள் சாதி – நீள்**
**கடலும் மலையும் எங்கள் கூட்டம்**
**நோக்க நோக்க களியாட்டம் (காக்கை குருவி எங்கள் ஜாதி, பா. 3)**

பாரதிக்கு ஒவ்வொரு கவிதையும் ஒரு குழந்தை! செல்லம்மாவிற்கு ஒவ்வொரு குழந்தையும் ஒரு கவிதை! விட்டுத்தரும் இல்லறம்தான் மகிழ்ச்சியைக் கொட்டித்தரும்!.

**விருந்தோம்பல்**

இல்லறக் கடமைகளிலே தலையாயது விருந்தோம்பல். தமிழரின் தனிச்சிறப்பு விருந்தோம்பல் பண்பாடு. விருந்து என்றால் புதுமை, புதியவர் என்று பொருள். 'விருந்தே புதுமை' என்கிறார் தொல்காப்பியர். தமக்கு அறிந்தவர்கள் மட்டுமன்றி அறியாதவர்களையும் விருந்தினர்களாக சங்ககால மக்கள் பேணிக் காத்தனர். இதனை,

**விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் அன்னகிழவோள் மாண்புகள் (தொல். கற்பு., நூ. 11)**

விருந்தினரை உபசரிப்பதும், சுற்றத்தை நல் முறையில் பேணுவதும் இல்லறப் பெண்களின் மாணபுகள் எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

சங்க இலக்கியத்தில் விருந்து போற்றும் இல்லறத்தான் பசிப்பிணி மருத்துவன் என்று சிறப்பிக்கப்படுகிறான். 'பசிப்பிணி மருத்துவன் இல்லம் அணித்தோ? சேய்த்தோ? கூறுமின் என்கிறான் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்.

**யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய!**
**பாணர் ! காண்க, இவன் கடும்பினது இடும்பை;**
**யாணர்ப் பழுமரம் புள்இமிழ்ந் தன்ன**
**ஊணொலி அரவந் தானும் கேட்கும்;**
**பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி**
**முட்டை கொண்டு வற்புலம் சேரும்**
**சிறுநுண் எறும்பின் சில்லொழுக்கு ஏய்ப்பச்,**
**சோறுடைக் கையர் வீறுவீறு இயங்கும்**
**இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும்; கண்டும்,**
**மற்றும் மற்றும் வினவுதும், தெற்றெனப்;**
**பசிப்பிணி மருத்துவன் இல்லம்**
**அணித்தோ? சேய்த்தோ? கூறுமின், எமக்கே. (புறம்., பா. 174)**

கிள்ளி வளவன் தனது நண்பன் சிறுகுடி கிழான் பண்ணனைப் பற்றிப் பாடிய பாடல். பண்ணனைத் தேடி பரிசில் பெறச் செல்லும் பாணன் கூறிய கூற்று இது.

நல்லியக்கோடனிடம் பரிசில் பெற நாடிச்செல்லும் பாணனை அந்த ஊரின்கண் வீட்டிலுள்ள பெண்கள் தங்கள் குழந்தைகள் வாயிலாக அழைத்துவரச்செய்து வெண்சோற்றில்

Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

நண்டோடு சேர்த்து சமைத்துக் கொடுத்து விருந்து உபசரித்தனர் என்று சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது.

சிலப்பதிகாரத்தில், கண்ணகியிடம் மீண்டு வந்த கோவலன் தனது செயலுக்கு வருத்தம் தெரிவித்தான். அதற்கு, கண்ணகி விருந்தினர்களுக்கும் துறவிகளுக்கும் அந்தணர்களுக்கும் உபசரித்து உணவளிக்கும் பேற்றினைக் கோவலனைப் பிரித்திருந்த காலத்தில் தான் இழந்ததாக குறிப்பிடுகிறாள் என்று விருந்தோம்பலின் சிறப்பை,

**அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்**
**துறவோர்க் கெகிர்தலும், தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை (சிலப்பதி., கொலைக்களக்., வரி. 71-73)**

என்று இளங்கோவடிகள் பதிவு செய்துள்ளார்.

**கொடையின் சிறப்பு**

உலகியலில் கொடை என்பது ஆண்களுக்குரியதாகவே காட்சிப்படுத்தப்படுகின்றது. பெருஞ்சித்திரனார் என்ற சங்கப் புலவர் குமணன் தந்த பரிசுப் பொருட்களை தனது மனைவியிடம் கொடுத்து இதை சேர்த்து வைக்காதே! அடுத்த அரசரைப் பார்க்கும் வரை வைத்திராதே! எல்லோர்க்கும் கொடு என்கிறார்.

**நின் நயந்து உறைநர்க்கும், நீ நயந்து உறைநர்க்கும்**
**பன்மாண் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்**
**நெடுங்குறி எதிர்ப்பை நல்கியோர்க்கும்**
**இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது**
**பல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி ! மனை கிழவோயே! (புறம்., பா. 163)**

என்கிறார். என்னிடம் அனுமதி பெறாமல் உன்னிடம் வந்து இரப்பவர்களுக்கு கொடுத்து உதவுக. உன்னை விரும்பிய சுற்றமும், நீ விரும்பிய சுற்றமும், உனக்கு உதவியோர்க்கும் கொடுத்துதவுக. மேலும், இன்னார் எனக் கருதாது அதாவது, வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என எண்ணாமல் எல்லோர்க்கும் கொடு என்கிறார். இதிலுள்ள நயம் என்னவெனில், கொடைப்பேற்றின் சிறப்பினை மனைவிக்கும் அளிக்கிறார்.

**நிறைவுரை**

பெண் என்பவள் தனக்காக வாழ்ந்ததைவிட தன்னைச் சார்ந்தவர்களுக்காக வாழ்ந்ததுதான் சரித்திரமாகின்றது என்பதை இக்கட்டுரை வாயிலாக உணர முடிகின்றது. தலைவன்மேல் கொண்ட அன்பு அவன் சார்ந்த அனைத்திலும் பிரதிபலிக்கின்றது. பெண்ணிடம் காணலாகும் மாட்சிமைகளாக குறையையும் நிறைவாகக் காணல், மௌனக்கிடுதல், விருந்தோம்பல், விட்டுக்கொடுத்தல், தன்னலம் கருதாத சேவை, அறிவுறுத்தல், ஆலோசனை வழங்குதல் போன்ற பல்வகையான பண்பு நலன்களை தொல்காப்பியம், சங்க

இலக்கியம் முதற்கொண்டு சிலப்பதிகாரம், நீதிஇலக்கியம், பாரதியார் கவிதைகள் வாயிலாக உய்த்துணர முடிகின்றது.

**குறிப்பு நூல்கள்**

[1] இராமசுப்பிரமணியம் வ.த. (உ.ஆ.). *சிலப்பதிகாரம்.* திருமகள் நிலையம், சென்னை, 2010.

[2] இராமசுப்பிரமணியம் வ.த. (உ.ஆ.). *புறநானூறு.* திருமகள் நிலையம், சென்னை, 2000.

[3] கோதண்டம், கோ. மா. முனைவர். *திருக்குறள்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2011.

[4] சிங்காரவடிவேலன், அர. (உ.ஆ.). *ஐங்குறுநூறு.* கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.

[5] திருஞானசம்பந்தம், ச. *தொல்காப்பியம், பொருளதிகாரம்.* கதிர்பதிப்பகம், திருவையாறு, பதிப்பு - 2011.

[6] நாகராசன், வி. (உ. ஆ.). *குறுந்தொகை (மூலமும் உரையும்).* நியூ சென்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, முதல்பதிப்பு - 2004.

[7] சுப்ரமணிய பாரதியார். *பாரதியாரின் ஞானப் பாடல்கள். விக்கி ஆதாரம்.* http://tinyurl.com/mhw3cpp9 23.09.2023ல் அணுகப்பட்டது.

[8] மெய்யப்பன். (ப. ஆ.). *பாரதியார் கவிதைகள்.* மணிவாசகர் பதிப்பகம். சென்னை, 2000.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி:** இல்லை

**கட்டுரையாளர் நன்றியுரை:** இல்லை

**கட்டுரையாளர் உறுதிமொழி:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்.



Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

# Dr. R. Shanthakumari - A Woman of Lifetime Achievement in Education and Service

**Dr. D. Maheswari**, Editor, International Journal of Tamil Language and Literary Studies, Virudhunagar, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0002-4187-0120
**DOI: 10.5281/zenodo.10511762**

## Educational and Social Activities



**Dr. R. Shanthakumari**

Dr. R. Shanthakumari is a highly accomplished and esteemed educator who has an impressive record of accomplishment in the field of education and social service. She served in various institutions in Tamil Nadu, India. She had an extensive teaching experience of 31 years as Associate Professor of History at A. P. C. Mahalakshmi College in Tuticorin and continuing teaching and administrative posts after her retirement. She has made a significant impact on countless students' and teaching faculty's lives. After her retirement, she held the position of Principal at MANO College, Sathankulam (Women) from 2016-2019 and MSU Constituent College, Nagalapuram from 2019 to 2022, which was later converted into Government Colleges. Her commitment to excellence was recognized with several prestigious awards by various institutions and NGOs. She received the Best College Teacher Award from the Government of Tamil Nadu in 2010, highlighting her exceptional teaching skills and her dedication to the development of students' success. Besides, she was honoured as the Best Author for her book on "Personality Development" by the Government of Tamil Nadu in 2012. This book displays her expertise in the field of personal growth and development and her contribution to developing the personality of the students through this book. She demonstrated exceptional leadership skills as the Best District Organizer of the Youth Red Cross in Thoothukudi District. She received a state-level award from the Tamil Nadu branch of 1.R.CS for her service. Her contributions to social work have been outstanding, earning her recognition from various organizations. The India Red Cross Society of Orissa presented her with the 'Best Performer of the Youth Red Cross National Award' for acknowledging her remarkable efforts in humanitarian work nationally. She was also honoured with the 'Sevai Thilagam Award by the Thiruvalluvar Kalakam at Tenkasi, Tamil Nadu for her commitment to community service. Indeed, her remarkable achievements extend beyond education and community service. Dr. R. Shanthakumari received the 'Best Rotary President Award' from Rotary International in recognition of her exemplary leadership and dedication to social and academic service. She has also been acknowledged as the 'Best Women' by GIANTS International and the 'Best Organizer' of Blood Donation Camps by the Thoothukudi District Collectorate.

Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X

Dr. R. Shanthakumari has rich contributions to research and historical studies. She received the 'Vanavariyar Endowment Award' from the History Congress for her outstanding research article. She gained certification as a 'First Medical Responder' from the National Headquarters of LRCS, giving prominence to her commitment to emergency medical services. In recognition of her contributions to society, she was honoured with the 'Life Time Achiever Award' by the Gandhi World Foundation, Chennai, highlighting her achievements and position as a genuine role model and inspiration to others. She has accomplishments in the field of education and research through scholarly writing. She published nearly twenty research articles in renowned magazines like "Social Change". It shows her dedication to contributing knowledge with academic discourses.

Dr. R. Shanthakumari prepared course materials for the B.A. History program (History of Archaeology) at DDE, Annamalai University. Her expertise has also been recognized in various seminars, workshops, and courses, where she acted as a resource person at national, state and district levels. Her experience extends to the convening of 70 programs including workshops, camps, training programs, conferences, and seminars on national, state, and district levels focusing on the development of the institution and students. In terms of positions held, she worked as a member of the Senate at MS University Tirunelveli, as a panel member for education. She also contributed to the Confederation of Indian Industries in Tuticorin as a member of the State Disaster Response Team IRCS in Tamil Nadu and acted as the district organizer of the Youth Red Cross in Tuticorin District from 2000 to 2010. Her ten-year tenure had seen many accomplishments in propagating the activities of the Youth Red Cross Movement. She served as a panel member of the Anti-Sexual Harassment Cell at Sibi Flour, a corporate entity in Tuticorin. Her leadership positions in various organizations such as the Rotary Club of Pearl City, SAHELI GIANTS International, and PALMS Toast Master International have seen development and service in those sectors. In addition, she has served as the coordinator of the Road Safety Patrol at APC College in Tuticorin since 2001 until her retirement from regular service as professor of history. She was involved with the YRC - APC College Unit as the program officer from 1999 to her retirement. She rendered her service as the staff in charge of the Union Activity Committee from the year 2000 to 2006. In addition, she acted as an active member of the NAAC Steering Committee at APC College, Tuticorin. Dr. R. Shanthakumari's involvement in research work includes evaluating four Ph.D. theses and serving as an external examiner for conducting Ph.D. viva voce exams. She guided two M.Phil scholars.

Dr. R. Shanthakumari had the honour of representing Tamil Nadu in various national camps and workshops, including the Three Day YRC National Camp in Orissa in the year 2004. She participated in the Five Day Workshop on PMER in New Delhi in the year 2012. Moreover, she was nominated as an Indian delegate for the International Red Cross Conference in Korea. She was appointed as a Subject Expert by the MS University in the field of Tourism and served as a member of the Inspection Committee for course affiliation at Udankudi College. She has also been invited as a Visiting Professor under U.G.C Plan by Tamil University in Thanjavur. She participated as a member of the Board of Studies for Special Courses at St Mary's College. She completed various orientation and refresher courses within the stipulated period and has undergone state and national-level training courses on disaster management, first aid, planning, monitoring, evaluating, and reporting. Her articles were published in reputed Tamil magazines such as 'Kalki', 'Thangamangai', 'Sinegithy', and 'Mangayar Malar'. Her popular articles in popular Tamil magazines such as

"Isakki Amman" in *The Hindu Tamil News Paper*, "Kaveri Karai Purandu Vaara" in *The Hindu Tamil News Paper*, "Kalvi Sindhanaiyalar A.P.C Veerabagu" in *Kalki*-Magazine, and a series of history articles in "Pattam" - Dinamalar Supplementary attracted the reading audience for decades. She also published ten articles in *Amudasurabi* Magazine under the special column "Varalaru Tharum Velicham" and an article entitled "Yathumagi Nindrai Amma" about her parents between the years 2021-2022.

She was invited to give talks in TV and radio programs, including Doordarshan, Sun TV, Raj TV, All India Radio Thirunelveli, and Tuticorin Stations. All of them are based on Society. She was a member of the State Disaster Response Team formed by the Indian Red Cross Society, Tamil Nadu Branch. She served as a member of the editorial board advisory committee for various publications, including the Silver Jubilee Souvenir for A.P.C.M. College, Tuticorin and the "Journal of Youth Red Cross" in Chennai. She is also a member of several professional bodies, including the Indian History Congress, Tamil Nadu History Congress, Joint Indian History Congress, Indian Sociological Society (ISS), and South Indian History Congress and the research committee member of Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India.

Dr. R. Shanthakumari has written several books, including "Facts on Tourism" in June 1996, "Sutturala - I" in August 1998 and "Suttrula - II" in June 2002 all published by Shantha Publishers, Chennai. She also published "Thoothukudi Arulmigu Sri Vembadi Essakkiamman Thirukkovil Thalavaralaru" in July 2004 and "Facts of Blood Donation Special Reference to Tuticorin District" in August 2009. In December 2010, the author received the 'Best Author Award' from the Government of Tamilnadu for the book "Personality Development". She has published a book entitled "தேசத்தை மீட்டெடுத்த கதர்" (Desathai Meetedutha Kadar) published by Pandian Educational Trust in November 2021. It shows her sense of patriotism in the 21st century and her contribution to remembering the freedom fighters and the Independence struggle to the modern public who were fed up with identity crises. Also, she published research articles in reputed journals such as "Lights on History" in *Coral Voice*, published by Rotary Club of Pearl City, Tuticorin. She also published articles such as "The Power of Spirit" in Youth Red Cross, by the Indian Red Cross Society, Chennai in the year 2004, and "Agrarian Change in Thanjavur District during the Pre-Independence Period" in Recent Trend in Historical Studies. She has also written about the "Role of the Communist Party in enhancing the economic status of agricultural labourers". "The Accession of Kulothunga – I" in *Quest Historica*, "Valiant Women Warriors under the Vijayanagara Empire in Tamil Temple Studies", "Caste System Depriving Social Justice" in *Enrich* and "Indian Constitution and its Impact on Society" in the 46th *All India Sociological Conference*.

Dr. R. Shanthakumari has presented numerous research papers and participated in various conferences, seminars, and workshops. Her research paper presentations include topics such as communalism as an ideology for political mobilization, caste conflict, widow marriage, agrarian change, and the Devadasi system, among others. She has presented her papers at national and international conferences, including the National History Conference, South Indian History Congress, and International Seminar on the Development of Criticism in Tamillogy. She served as the Chairperson in conferences such as "Literary Bricolage in Psychodynamic Perspective" and "Ecocriticism: Its Nuances and the Significance of Ecological Values in Literature." Additionally, she has conducted workshops on various subjects, such as "Teaching Communicative English and Online Teaching and Examination

Methods for College Students." In summary, Dr. Shanthakumari has made significant contributions to the field of history, administration and especially in areas related to social issues, education, and literature.

Dr. R. Shanthakumari as a pioneer among the nine other Manonmaniam Sundaranar University Colleges directed the Directorate of Distance Education and Continuing Education of the Manonmaniam Sundaranar University with more than 500 admissions since its inception under her guidance in the centre at MSUC Model College. New classes have been introduced for the betterment of the students. Yoga in collaboration with Aliyar Yoga Centre and Hindi classes with a focus on spoken Hindi has been started in the college. The college has also implemented new practices such as conferring the Best Teacher Award, conducting elections for student leaders, selecting outstanding students through staff voting, and celebrating national days and women's empowerment. She made efforts to improve the infrastructure of the college with block development plans and a sponsored canteen motivating the students in institutional service and entrepreneurship. She purchased two water tanks for the welfare of the students and donated them to the college in the year 2019 where students suffered from drinking water. Various programs and events have been organized, including an antique exhibition, eye screening camps in collaboration with Thirunelveli Aravind Hospital, festival celebrations and academic association meetings. International and National Days and the Freedom Fighters Birthdays were celebrated on the campus by her guidance. Students were motivated to speak short topics, proverbs and news matters through the mic from the principal's office. Her contributions motivated the students in a clear direction of empowerment in studies and developing skills. As the Principal of MSUC College, Dr. R. Shanthakumari communicated with the students by regularly meeting them and providing opportunities to participate in programs inside and outside the academic zones to remove the gap and fear in the minds of the young minds. Faculty members have demonstrated their proficiency by publishing research papers participating in international seminars and conducting International and national Conferences. The English Department conducted Six international conferences and the Economics, Commerce and Mathematics departments conducted programs under her chairship. She received several awards and honours for her contributions and achievements. Publications have also been made on her. The faculty members of Sathankulam College created a booklet displaying her service and dedication of her with gratitude and appreciation. MSUC College experienced an increase in student enrollment under her leadership in the years 2016 - 2022. Overall, Sathankulam and Nagalapuram colleges have achieved academic excellence under her guidance. Her motivation and direction implemented innovative initiatives, improved infrastructure and provided a supportive and empowering environment for students and faculty in the institutions after her regular service.

The MANO College, Sathankulam; later Government Arts and Science College (Women), Manonmaniam Sundaranar University Constituent Model College, Nagalapuram; later Government Arts and Science College, Nagalapuram witnessed significant progress and accomplishments during the tenure of Dr. R. Shanthakumari as the Principal. She is nearly sixty-seven but never compromised in her service to the student community, development of educational Institutions and other charity works. Now, she works in the Thulasi group of Institutions. It will be a new era in her life in developing the institution. Dr. R. Shanthakumari is an erudite scholar, academician, administrator and a noble woman who has motherly love for the development of the students served and serving the academic institutions with a great

**Volume 3, Issue 2, November 2023** **E-ISSN – 2583-715X**

vision for the development of society. Such women are needed for society to empower our country India. She always says her Father, Mother, beloved sister (all late) and the Essaki deity in Thoothukudi guided her in her success. She is always responsible and compassionate. Such a family-oriented, respectful, thankful, polite, sagacious and audacious woman she is. Her loved ones will witness her dedication.

## Images


அமுதசுரபி
AMUDASURABI
TAMIL MONTHLY
யாதுமாகி நின்றாய் அம்மா!

**Cover Page "Yathumagi Nindrai Amma" Amuthasurabi** **Her Mother** **With Parents (Img -1) At a Family Function**

## Reference

[1] Images. *Amudasurabi*. July 2022, Cover page, pp. 38 and 39.

**Author Contribution Statement:** NIL.
**Author Acknowledgement:** Nil
**Author Declaration:** Nil

Pandian Journal of Women's Studies
Peer-Reviewed Journal
பாண்டியன் மகளிர் ஆய்வு இதழ்
மதிப்பாய்வு செய்யப்படும் இதழ்
Volume 3, Issue 2, November 2023 E-ISSN – 2583-715X






# *Eating Wasps* by Anita Nair - A Book Review

**Dr. C. Chellappan,** Guest Faculty of English, Department of English and Comparative Literature, Madurai Kamaraj University, Madurai-21, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-8517-7953**
**DOI: 10.5281/zenodo.10511776**

## Book Review

*Eating Wasps* is an appealing mystery novel written by Anita Nair. It is set in the setting of a small Indian town by the river Nila. The story involves the readers in a mysterious and captivating tale that explores themes such as loss, identity and the tragic death of a thirty-five year old author named Sreelakshmi. Nair's weaves multiple perspectives in the novels. The novel revolves around the life of Sreelakshmi who finds her life haunted by a traumatic past. Nair's portrays Sreelakshmi's emotional turmoil and invite readers to empathize her inner struggles. One of the most noteworthy aspects of the novel *Eating Wasps* is shrewd characterization. Every character is scrupulously developed with a distinctive voice, desires, and secrets for their lives. Through the characters, Nair explores the complexities of human nature, flaws, ambiguous, and utterly real. The interactions between the characters are authentic and thought provoking. Nair explores various themes, including sexual assault, mental health, and societal prejudices through the novel. She addresses the harsh realities faced by women in contemporary Indian society through the primary character. She forces the readers to question societal norms and challenges the streotypes. The plot of *Eating Wasps* is intricate and filled with twists and turns that keep the readers mesmerised. Nair's storytelling reveals the truth behind the mystery creating suspense and tension in all chapters. It allows the readers to delve into the emotional depths of the characters. Nair's detailed descriptions carry the reader into the fictional world of a small town in India. From the active streets to the colorful festivals, her reminiscent prose brings the set to life, making it feel almost substantial. Even though *Eating Wasps* opens up some challenging and uncomfortable topics, it eventually offers a message of spirit, hope, and the power of self-discovery. It also encourages the readers to confront their own problems, to find strength in themselves and reclaim their own spirit. In short, Anita Nair's *Eating Wasps* is an enchanting mystery novel that delves profound into the human psyche by exploring the fragility and complexity of human existence in a book form. It is a book of thought-provoking themes, vibrant characters and a compelling story. This book is a book catered for those who enjoy intelligent and emotional mysteries.

## References

[1] Nair, Anita. *Eating Wasps.* Westland Publications Limited, 2018.
[2] Cover Image. *Eating Wasps.* Westland Publications Limited, 2018.

**Author Contribution Statement:** NIL.
**Author Acknowledgement:** Nil
**Author Declaration:** Nil